30th April 1960]

*Ministers tour during bye-elections*

* 897 *Q.*—SRI D. S. AUTHIMOOLAM: Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) How many Ministers toured in the recent bye-elections at Tuticorin and Alangulam;

(*b*) the amount of Travelling Allowance drawn by them;

(*c*) how many officials toured along with the Ministers; and

(*d*) the amount of Travelling Allowance drawn by them?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) Four Ministers including the Chief Minister toured the Constituencies in connection with the bye-elections.

(*b*) Travelling Allowance was not drawn by any of the Ministers as all the visits were private.

(*c*) & (*d*) Do not arise as the visits were private.

SRI D. S. AUTHIMOOLAM: அப்படி வாங்கவில்லை என்று சொன்னாலும் இந்த உபதேர்தல்களில் அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செய்து, கல்வி அறிவு இல்லாத இந்த நாட்டில் வோட்டர்களுடைய மனத்தை கெடுத்து எதிர்க்கட்சிகள் வெற்றி பெற முடியாத நிலைமையையே உண்டாக்கிக்கொண்டிருப்பதால், கட்சித் தலைவர்களைத் தவிர உபதேர்தல்களின்போது மந்திரிகள் சுற்றுப்பிரயாணம் செய்வதில்லை என்ற முடிவையாவது நல்ல ஜனநாயக அமைப்பை ஏற்படுத்துவதற்காக முன்வருவார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அங்கத்தினர்களுடைய யோசனையை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. குறிப்பாக உபதேர்தல்களின்போது எதிர்க்கட்சிகள் இந்த அமைச்சர் அவை செய்கின்ற தவறுகளை அல்லது செய்யாத தவறுகளைச் செய்திருப்பதாக மக்களிடையே பிரசாரம் செய்கிறபோது அமைச்சர்களைத் தவிர மற்றவர்கள் யாராலும் அது தவறு செய்ய இல்லை என்று எடுத்துக்காட்ட முடியாது. இவர்கள் எடுத்துச் சொல்லவில்லை என்றால் எதிர்க்கட்சிக்காரர்கள் சொல்வது அத்தனையும் உண்மைதான் போலிருக்கிறது என்ற எண்ணம் வாக்காளர்களிடையே உண்டாகக் கூடும்.

SRI D. S. AUTHIMOOLAM: உபதேர்தல்களின்போது மற்ற நாடுகளில் அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்வதில்லை. பொதுத்தேர்தலாக இருந்தாலும் பரவாயில்லை. ஆகவே காங்கிரஸ் கட்சித் தலைவரைத் தவிர மந்திரிகள் சுற்றுப் பிரயாணம் செய்வதில்லை என்று ஜனநாயகத்தில் இவர்களுக்கு நம்பிக்கை இருந்தால் ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அங்கத்தினர் எந்த நாட்டைப் பற்றிச் சொல்லுகிறார் என்று எனக்குத் தெரியவில்லை. அந்த விவரங்களை எல்லாம் என்னிடம் கொடுத்தால் நானும் படித்துப் பார்த்து என்ன செய்யவேண்டுமோ அதைச் செய்கிறேன்.

[30th April 1960

SRI V. K. KOTHANDARAMAN: மத்திய சர்க்காரினுல் அமைக்கப்பட்டிருந்த குழு அமைச்சர்கள் அதிகாரத்தை வைத்துக்கொண்டு தேர்தலில் பங்கு எடுப்பது ஜனநாயகத்திற்கு விரோதம் என்று சொல்லியிருக்கிறூர்கள் அல்லவா ? அப்படி இருக்கும்போது அமைச்சர்கள் அதிகாரத்தை வைத்துக் கொண்டு தேர்தலில் பங்கு எடுப்பது ஜனநாயகத்திற்கு நேர் விரோதம் அல்லவா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: இப்பொழுது அதிகாரத்தை வைத்துக்கொண்டு வோட்டு வாங்க முடியாது. அதிகாரத்தோடு வோட்டு கேட்டால் வோட்டு போட மாட்டார்கள். அமைச்சர்கள் போகும்போது திட்டங்களை விளக்குகிறூர்கள். மக்கள் மந்திரிகளைக் கேட்பதற்கு வாய்ப்புக் கொடுக்கவேண்டும். மந்திரிகள் போவது மிகவும் அவசியம். மந்திரிகள் போகாமல் இருந்தால், ஏதாவது தவறு செய்திருந்தால் இதிலிருந்து தப்பித்துக்கொள்வதற்காகத்தான் போகாமல் இருக்கிறூர்கள் என்று சொல்வார்கள்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Sir, I can understand the Minister's touring. But still I want to know whether the officials can accompany these Ministers, and whether they can start all sorts of ceremonies like the opening of maternity centres or the switching on of electric lights just on the eve of elections.

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I do not know whether any such functions were held, and under what circumstances. Therefore I cannot answer a hypothetical question.

SRI M. KALYANASUNDARAM: அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செய்ய அரசியல் கருத்துக்கள்பற்றி எனக்கு ஒன்றும் ஆட்சேபனை கிடையாது. (குறுக்கீடு) அவர்கள் கருதுவதாக இருக்கலாம். ஆனுல் என்னுடைய கருத்து இது. ஆனுல் தேர்தல் காலங்களில் ஸ்ரீ வி. கெ. ராமசாமி முதலியார் அவர்கள் சொன்னதுபோல் அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்கிறபோது கூட அதிகாரிகளை அழைத்துச் செல்கிறூர்கள் என்று சொன்னூர்கள். இந்த சமயம் பார்த்து—ஏற்கெனவே அவர்களை அழைத்து விழாவை நடத்துவதுபற்றி பாராட்டுகிறேன், இதைப் பற்றி குறிப்பிடவில்லை. ஆனுல் இந்த சமயம் பார்த்து ரோடு போடவேண்டும், பாலம் கட்ட வேண்டும் என்று சொல்லி ஓட்டு சேகரிக்கிறூர்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: இது மாதிரியாக ஏதாவது பொய்சொல்லி ஓட்டுபெறுவது தவறு என்று ஒப்புக் கொள்கிறேன். பல சமயங்களில் திட்டங்கள் நிறைவேற்றப் படுமா என்று கேட்கிறூர்கள். இதனுல் பதில் சொல்ல மாட்டேன் என்று சொல்லமுடியுமா ? திட்டம் நடப்பதுபோல் இருந்தால் திட்டம் நடைபெறும் என்று சொல்லுகிறேூம். நிறைவேற்ற முடியாமல் இருந்தால் நிறைவேற்றமுடியாது என்று சொல்லிவிடுகிறேூம்.

30th April 1960]

Sri D. S. AUTHIMOOLAM: சுற்றுப்பிரயாணம் செய்யும் போது, உபசாரப்பத்திரம் பெற்றுக்கொண்டு திறப்பு விழா நடத்துகிறார்களே, அப்பொழுது மந்திரிகள் வாக்குறுதி கொடுக்கிறார்களே. உதாரணமாக தென்காசி தாலூகா மாரந்தை பஞ்சாயத்து போர்ட்டில் உபசாரப்பத்திரம் அளித்தபோது முதன் மந்திரி அவர்கள் பதில் அளிக்கையில், பள்ளிக்கூடம் கட்டுவதற்கு உதவி செய்வதாகத் தெரிவித்திருக்கிறார்கள். அம்மாதிரி செய்வது கெட்டபழக்கமாக இருக்கிறது என்பதை மந்திரி அவர்கள் உணர்வார்களா ?

The Hon. Sri C. SUBRAMANIAM: அம்மாதிரி நடந்ததோ இல்லையோ கனம் அங்கத்தினருக்கு பதில் சொன்னால் இதைப் பற்றி ஒப்புக்கொண்டதுபோல் ஆகும். இதைப்பற்றி இப்போது பதில் சொல்லக்கூடிய நிலைமையில் இல்லை.

*College for women at Salem*

* 898 *Q.*—Srimathi HEMALATHA DEVI: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதில் அளிப்பாரா—

சேலத்தில் பெண்களுக்கென்று தனிக்கல்லூரி ஒன்று ஏற்படுத்த அரசாங்கத்திற்கு உத்தேசமுண்டா ?

The Hon. Sri C. SUBRAMANIAM: No, Sir.

Srimathi HEMALATHA DEVI: பெண்களுக்கென்று தனிக் கல்லூரி ஏற்படுத்த உத்தேசம் இல்லை என்று கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். சேலம் ஜில்லாவிலே இருக்கிற பெண்களுக்கு உயர்நிலைப்பள்ளிப் படிப்பு போதும் என்று கனம் அமைச்சர் அவர்கள் கருதுகிறார்களா ? இல்லை பொருளாதாரம் காரணமாக நிறுத்தப்பட்டிருக்கிறதா ? இதற்காக பொதுமக்கள் தொகை கொடுத்தால், அரசாங்கம் எவ்வளவு தொகை கொடுக்க முன்வரும் என்று அமைச்சர் அவர்கள் கூறுவார்களா என்று அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri C. SUBRAMANIAM: சேலத்தில் பெண்களுக்கென்று அரசாங்கம் தனியாக ஒரு கல்லூரி ஏற்படுத்த உத்தேசம் இல்லை. தனிப்பட்டவர்கள் முயற்சி செய்துகொண்டு வருகிறார்கள். எந்த அளவிற்கு நிறைவேற்றுவார்கள் என்று சொல்லமுடியாது.

Sri A. VEDARATHNAM: இந்த மாநிலத்தில் ஜில்லா தோறும் பெண்கள் கல்லூரிகள் இருக்கின்றனவா ? அப்படி இல்லையென்றால் ஒவ்வொரு ஜில்லாவிற்கும் ஒரு பெண் கல்லூரியை ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் முன்வருமா ? இந்த மாநிலத்தில் எவ்வளவு பெண்கள் கல்லூரிகள் இருக்கின்றன என்பதைப்பற்றிய விவரங்களை அறிவிப்பார்களா ?